

# ஸ்ரீ ராமாநுஜன்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை





கள்ளார்பொழில் தென்னரங்கன் * கமலப்பதங்கள் நெஞ்சில்
கொள்ளாமனிசரை நீங்கி * குறையல் பிரானடிக்கீழ்
விள்ளாதவன்ப னிராமாநுசன் மிக்க சீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சு * ஒன்றறியே னெனக்குற்ற பேரியல்வே.



மதராஸ்

ஸத்கிரந்த பிரகாசன சபையின் வெளியீடு

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

Edited Printed & Published by S. R. Varadarajan, B. A., for
Madras Sathgrantha Prakasana Sabha, at Sri Lakshmi Printing Works,
Car Street, Salem. Editor: P. B. Annangaracharya Swami.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன்.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை
யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை
[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]
ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| முதல் தொகுதி | 10—10—1948 | 2-வது பகுதி |
|---|---|---|

## ஸ்ரீ ராமாநுஜன்

oooooooooooo○ஸ்ரீ○oooooooooooo

இப்பத்திரிகை ஸ்ரீ ராமாநுஜன் 'திருநாமம் பூண்டிருப்பதனால் ஒவ்வோரிதழிலும் தலையான வியாஸமும் ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றியே அமையவேண்டுமென்பது எமது நோக்கம். உலகுக்கு ஒருயிரான அப்போசிரியருடைய திருக்குணங்களைப்பற்றியோ திவ்ய சரிதையைப்பற்றியோ, அவரது ஸ்ரீஸூக்திகளிலுள்ள விசேஷங்களைப்பற்றியோ ஏதேனுமொருவகையில் அவருடைய ஸம்பந்தமான வியாஸம் முகப்பில் அமைந்து தீரும். முன்னிதழின் தலையில் வெளியிட்டுள்ள இராமாநுச நூற்றந்தாதிப் பாசுரம் "நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே" என முடிவுபெற்றிருத்தலால் அந்த ஸ்ரீ ராமாநுஜத் திருநாமத்தின் பொருள் விசேஷங்களைப்பற்றி இங்கு அநுபவிக்கவிரும்புகின்றோம்.

இவ்வாசிரியர்க்கு இந்தத் திருநாமம் எதனால் இடப்பட்டதென்று ஆராயுமளவில், முன்னோர்களுடைய நூல்களிலிருந்து இங்ஙனே அறியலாகிறது;— ஸ்ரீ ராமாநுஜனென்னுஞ் சொல் ஸ்ரீராமபிரானுடைய தம்பி யென்னும் பொருள்கொண்டது; தசரதாத்மஜனான இராமபிரானுக்கு இளையோனாக அவதரித்த லக்ஷ்மணன் என்றபடி. அவன் இடைவீடின்றிக் கைங்கரியமே போதுபோக்காக இருந்தது போல ஸ்வாமி உடையவரும் கைங்கரியத்தையே பெருஞ் செல்வமாகக்கொண்டிருக்கப்போகிறாரென்பதை அவதார ஸமயத்திலேயே யோகத்ருஷ்டியினாலறிந்தவரும் இவர்தமக்கு மாதுலருமான திருமலைநம்பியென்னுமாசிரியர் இவர்க்கு இராமாநுசனென்று நாமகரணஞ் செய்தருளினர்—என்பதாக.

ஸ்ரீராமபிரான் கைகேயியின் வரப்ரார்த்தனையை நிறைவேற்றும் வியாஜமாகக் கானகஞ் செல்லப் புறப்படும்போது இளையோனான இலக்குமணன் தானும் நிர்ப்பந்தித்துத் தன்னையும் உடனழைத்துச் செல்லும்படி வேண்டினன். தானும் காட்டுக்கு வர விரும்பியது எதற்காகவென்னில்; *பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரி ஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச் ச தே*

என்பது அப்போது இவ்விளைய பெருமாளுடைய வார்த்தையாக ஸ்ரீ ராமாயணத்தில் உலகறிய நிற்கும் ச்லோகம். “தேவரீர் பிராட்டியோடுகூட சித்திரகூடத்தாழ்வரை முதலானவிடங்களில் இன்புறும் போது அடியேன் ஒழிவில்காலமெல்லாமுடனுய்மன்னி வழுவிலாவடிமைகள் செய்யப்போகிறேன்” என்பது மேலே குறித்த ச்லோகத்தின் கருத்து அப்படியே அவ்விளையோன் தன்னுடைய வாழ்நாள் முழுவதையும் அடிமையெனும் அத்தாணிச் சேவகஞ் செய்தே கழித்தனன். அதுபோலவே ஸ்வாமி உடையவரும் தம் வாழ்நாள் முழுவதையும் தொண்டுபூண்டமுதமுண்டே கழித்தருளினரென்பது அவரது திவ்விய சரிதையினால் மிகப் பிரசித்திபெற்ற விஷயம். தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்ததும் மாறனுரைசெய்த தமிழ்மறை வளர்த்ததும் முதலானவை ஒப்புயர்வற்ற கைங்கரியங்களன்றோ. ஆக இக்காரணம்பற்றியே ஸ்வாமிக்கு ராமாநுஜனென்னும் திருநாமமிடப்பட்டதென்பது மிகப் பொருத்தம். லக்ஷ்மண முநி யென்றும் இளையாழ்வா ரென்றும் வழங்குகின்ற இவரது திருநாமங்களும் இதனை வற்புறுத்தி நிற்கும்.

இனி, ராமாநுஜனென்ற திருநாமம் லக்ஷ்மணனுக்குப்போலவே கண்ணபிரானுக்கும் பொருந்தியதே. ‘பலராமனுடைய தம்பி’ என்னுங் காரணத்தினால் கண்ணபிரானை ராமாநுஜனென்னக் குறையில்லையன்றோ. ஆனதுபற்றியே முகுந்தமாலை யென்னும் உலகமறிந்த ஸ்தோத்திரத்தில் “ஹே ராமாநுஜ ஹே ஜகத்த்ரய குரோ! ஹே புண்டரீகாக்ஷ மாம் ஹே கோபீஜந நாத பாலய” என்று ராமாநுஜனென்ற திருநாமத்தினாலேயே கண்ணபிரான் அழைக்கப்பட்டுள்ளான். ஆகவே கண்ணபிரானுடையதான அந்தத் திருநாமமே ஸ்வாமி உடையவர்க்குச் சாத்தப்பட்டதென்று கொள்ளுகிற ஸம்பிரதாயமும் ஒன்றுண்டு. ஸ்ரீநிகமாந்த தேசிகன் பணித்த யதிராஜ ஸப்ததியில் “சமிதோதய சங்கராதிகர்வ: ஸ்வபலாத் உத்த்ருத யாதவப்ரகாச:, அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய:” என்ற ச்லோகம் இதற்கு ஆதாரமாக அவதரித்ததாகும்.

கண்ணபிரானுக்கும் உடையவர்க்கும் பல படிகளாலும் ஸாம்யமுண்டு. கண்ணபிரானாகத் தோன்றின பகவான் செய்த செயல்களும் ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயல்களும் ஒத்திருக்கையாகிற ஒற்றுமைநயம் ஈண்டு நிரூபிக்கப்படுகிறது. மேலே யெடுத்துக்காட்டிய சமிதோதய சங்கராதிகர்வ: இத்யாதியான யதிராஜஸப்ததிச்லோக ரத்னத்தில் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யம் சிலேடையினால் நிர்வஹிக்கப்பட்டுளது: அது வடமொழிக்கடலில் ஆழ்ந்தவர்கட்கே ரஸிக்கக்கூடியது. இங்கு நாம் நிரூபிக்கும் ஒற்றுமை சரித்திரப்போக்கில் ஸம்பந்தப்பட்டதாகும். கேண்மின்;—

1. கண்ணபிரான் திருவவதாரஞ் செய்த இடம் சிறைக்கூடம் என்பது உலகமறிந்தது. ஸ்ரீராமாநுஜர் அவதரித்த இடமும் சிறைக்கூடமே. எப்படியெனில்; *அமரரோடு உயர்விற் சென்று அறுவர்தம் பிறவி யஞ்சிறையே* [திருவாய்மொழி 1-3-11] என்ற நம்மாழ்வார் திருவாக்கின்படி இந்த ஸம்ஸார மண்டலமே ஒரு சிறைக்கூடமன்றோ. இஃது *இருள்தருமா ஞாலமாதலால் இருள் மலிந்த விடத்தே வந்து பிறந்தார் ஆசாரியர், கண்ணனும் *இருள் நாள் பிறந்த வம்மான்* என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தின் படியும் *வேண்டித் தேவரிரக்கவிங்கிருள்வாய் வந்து பிறந்ததும்* என்ற நம்மாழ்வார் பாசுரத்தின்படியும் இருள்மலிந்த போழ்தன்றோ பிறந்தது.

2. கண்ணபிரான் அவதரித்தபோது *ஜாதோஸி தேவதேவேச! சங்கசக்ரகதாதர!* என்கிறபடியே சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையனாகவே சுடர்விளக்கத்தோடு திருவவதரித்தான். ஆசாரியர் அவதரிக்கும்போதும் நம் போலியரைப்போலே அழுதல் அரற்றுதல் செய்யாதே மிக்க ஞான வெள்ளச் சுடர் விளக்கத்தையே காட்டிக்கொண்டு அனைவரும் வியப்புறுமாறு அவதரித்தார். கண்ணபிரான் பிறந்தவிடம் ஒன்று; இளமையில் வளர்ந்தவிடம் வேறொன்று; பிறகு வளர்ந்தவிடம் மற்றொன்று. (அதாவது) வடமதுரையிலே பிறந்தது; திருவாய்ப்பாடியிலே இளமையில் வளர்ந்தது; பிறகு முதுமையில் த்வாரகை

முதலான விடங்களில் வளர்ந்தது. ஆசாரியரும் பிறந்தது ஸ்ரீபெரும்பூதூரில்: இளமையில் வளர்ந்தது காஞ்சீபுரியில்: பிறகு வளர்ந்தது ஸ்ரீரங்கம், திருநாராயணபுரம் முதலான விடங்களில். [மற்றொரு வகையு முண்டு;] ''திருமந்திரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து'' என்கிற நம் முன்னோர்களின் முதுமொழி யின்படியே திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தினால் ஸ்வரூபவுணர்ச்சி பெறுதலாகிற பிறவியைப்பெற்று, த்வயம் என்கிற மந்த்ரத்தின் அநுஸந்தானத்தையும் அதன்படி அனுட்டானத்தையுமே செல்வவாழ்ச்சி யாகக்கொண்டிருப்பவரென்க பிறக்குமிடம் திருமந்த்ரம்; வளருமிடம் த்வயம்—ஆகையாலே இதனால் கண்ணனோடு ஒப்புமை

3. கண்ணபிரான்பிறந்த வயிற்றில் இவனொருவனே பிறக்கவில்லை; *மக்களறுவரைக் கல்லிடை மோத இழந்தவள்தன் வயிற்றில், சிக்கன வந்து பிறந்து நின்றாய்* [பெரியாழ்வார் திருமொழி 5-3-1.] என்கிறபடியே மற்றும் பல மக்கள் பிறந்தாருண்டு; ஆனால் அந்தப் பிள்ளைகளினால் உலகுக்கு யாதோருதவி யும் நேர்ந்ததில்லை; அவர்கள் பிறந்ததும் இறந்ததுமே தெரியவருகின்றது. இதுபோல, ஆசாரியர் திரு வவதரித்த இவ்வுலகத்தில் மற்றும் பலபேர்களும் ஒக்கப்பிறக்கின்றார்களெனினும் அவர்களால் உலகுக் கொரு நன்மையுமில்லையாயிற்று. அவர்களின் பிறப்பும் இறப்புமேதான் உலகுக்குத் தெரியும்.

4. கண்ணபிரான் வடமதுரையில்நின்றும் திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளும்போது ''வஸுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ'' என்னும்படி பேராழமான பெருவெள்ளமும் முழந்தா ளளவாக வற்றிப்போயிற்றென்று தெரியவருகிறது. அதுபோல, ஆசாரியர் சிறிது ஸஞ்சரிக்கத் தொடங் கும்போதே ''பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதமாகின்றதால்'' என்ற பெரியாழ்வார் திருவாக் கின்படியே ஸம்ஸாரமாகிற பெருங் கடலும் வற்றத் தொடங்குமென்க.

5. பராத்பரனான பெருமான் தனது பெருமைகளை யெல்லாம் மறைத்து அடக்கிக்கொண்டு நீறு பூத்த நெருப்புப்போலேயாகி இடக்கை வலக்கை யறியாத ஆயர்களோடே கலந்து பழகினான்: அதுபோல ஆசாரியரும் மிகுஞானச் சிறு குழவியாய்த் தமது ஞான சக்திப் பெருமைகளையெல்லாம் மறைத்துக்கொண்டு அறிவிலா மனிசரோடே கலந்து பழகியிருந்தனர் கண்ணன் இடையர்களோடுமாத்திரம் கலந்து பழகி யிருந்தானல்லன்; தன்னை வதைக்க வழிபார்த்திருந்த ஆஸுரப்ரக்ருதிகளோடும் கலந்திருந்து காலங் கழித்தனன். ஆசாரியரும் தம்மை மாய்க்கவெண்ணின யாதவப்ரகாசர்போல்வாரிடத்திலும் கலந்திருந்து காலங்கழித்ததுண்டே.

6. வளர்ந்தருளுமிடத்தில் தீயபுந்திக் கஞ்சனால் ஏவப்பட்ட பூதனை தாய்வேஷம் பூண்டுவந்து நஞ்சு தீற்றிய முலையை உண்ணக் கொடுத்துக் கண்ணனைக் கொல்ல முயன்று தானே முடிந்துபோனாள். இந்தப் பூதனையின் வரலாற்றைப் பேசுகின்ற தேசிகர் யாதவாப்யுதயத்தில் *கம்ஸப்ரயுக்தா கில காபி மாயா* என்று மாயை யென்கிற சொல்லால் கூறினர். மாயை யென்று மூலப்ரக்ருதிக்குப் பெயர். அது உண்மை யில் விஷம்போன்றதாயிருக்கச் செய்தேயும் தன்னிடத்தில் போக்யதா புத்தியை யுண்டுபண்ணிக்கொண்டு தன் பக்கலிலே யீடுபடுத்தி நம்போல்வாரை முடிக்கப்பார்க்கிறது. இப்படியே ஆசாரியரையும் முடிக்கப் பார்க்கையில் அவரை முடிக்கமாட்டாமல் அவரது அளவற்ற பெருமையினால் தானே முடிந்து நிற்கிறது.

7. *கள்ளச் சகடங் கலக்கழியக் காலோச்சி* [திருப்பாவை—6] என்றபடி அஸுராவேசம் பெற்ற வொரு சகடத்தைக் கண்ணன் திருவடிஸ்பர்சத்தால் நொறுக்கி முறித்து முடித்தனன் என்பது ப்ரஸித்தம். ஆசாரியரும் தமது திருவடி ஸ்பர்சத்தினால் சகடபங்கஞ் செய்தவரே (எப்படியென்னில்) ஓரிடத்தி லிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோகும் ஸாதனம் சகடமெனப்படுவது. இங்கிருந்து நாம் அப்பால் செல்லப் பல வழிகளுண்டு; நரகம் சுவர்க்கம் முதலானவற்றின் வழிகளிற் கொண்டு செல்லுவது கள்ளச் சகடமாகும்; ஆசாரியருடைய திருவடி ஸம்பந்தத்தினால் அது தொலைந் தொழிந்ததேயாம் அர்ச்சிராதி

மார்க்கமாகிய நல்வழியிற் செல்லும் ஸாதனமே மேம்பட்டுத் தீயவழிகளிற் செல்லும் ஸாதனம் சிதைந்தொழியுமென்க.

8. கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிடப்பெற்ற கண்ணன் அவ்வுரலையுமிழுத்துக்கொண்டு தவழ்ந்து இரட்டை மருத மரங்களின் நடுவே யெழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அந்த இரட்டை மரங்களிரண்டும் முறிந்து விழுந்தனவாக யமளார்ஜுன பங்க விருத்தாந்தமுள்ளது. இணைபிரியாதே நின்ற இரட்டை மருத மரங்கள்போல இணைபிரியாது நின்று நம்மை நலியுமவை பலவுண்டு. பகவத் கீதையில் நான்காவது அத்யாயத்தில் *த்வந்த்வாதீதோ விமத்ஸர:* என்றும், ஏழாவது அத்தியாயத்தில் த்வந்த்வமோஹேந பாரத என்றும், பதினைந்தாமத்யாயத்தில் *த்வந்த்வைர் விமுக்தாஸ் ஸுக துக்கஸம்ஜ்ஞை:* என்றும் இப்படி பலவிடங்களில் த்வந்துவம் (இரட்டை) என்று பல சொல்லப்பட்டுள்ளன; இன்பு துன்பு, அஹங்கார மமகாரம், காமக்ரோதம், புண்ணிய பாபம் ...என்னு மிவையெல்லாம் இரட்டைகளாம். இவையெல்லாம் ஆசாரியர் திருவடி ஸம்பந்தம் பெற்ற வளவிலே இற்றொழிந்தனவென்க.

9. *வையமேழுங் கண்டான் பிள்ளை வாயுளே* என்றும் *வாயுள் வையகங்கண்ட மட நல்லார்* என்றும் சொல்லுகிறபடியே கண்ணபிரான் தனது திருவாயில் எழுலகங்களையும் அன்பர்களுக்குக் காட்டினன். அதுபோல ஆசாரியரும் 1. ச்ருதிகள், 2 ஸ்மிருதிகள், 3 இதிஹாஸங்கள், 4 புராணங்கள் 4 பாஞ்சராத்ரங்கள், 6 ஆழ்வாரருளிச் செயல்கள், 7 ஆசார்ய திவ்யஸூக்திகள் ஆகிய ஏழையும் தமது திருவாக்கில் அன்பர்கட்குக் காட்டினர்.

10. யமுனையாற்றில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினியினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினன். இவ்வரலாற்றை யாதவாப்யுதய காவியத்தில் தேசிகர் கூறுமிடத்து (4-125) ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயலையே உவமையாகக் காட்டியருளினர் ஐந்தலைவாய் நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்தது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம் போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி யமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்தது—ஆசாரியர் தவறான பொருள்களை நீக்கி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துகளுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனையின் ஸ்தானத்தில் வேதம்; காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள்; கண்ணன் ஸ்தானத்தில் ஆசாரியர். *தூயபெருநீர் யமுனைத் துறைவனை* என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடைத்தாயிருக்கும்.

காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை யுமிழ்ந்து நாசம் விளைவித்ததுபோல புறமதத்தவர்கள், ஐந்துவிதமான துர்வாதங்களாலே நாசத்தை விளைவிக்கின்றனர்; (எப்படி யென்னில்) 1 ஈச்வரனே யில்லையென்னுதல், 2 ஈச்வரன் உண்டெனினும் அவன் அனுமானத்தால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்திரத்தால் ஸித்திப்பவனல்லன் என்னுதல் 3 சாஸ்திரங்களைக்கொண்டே ஈச்வரனை யங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லை யென்னுதல் 4. ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பல ஈச்வரர்கள் உண்டென்னுதல், 5. பிரபஞ்சமேயில்லை—ஸர்வம் சூன்யம் எனல். ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்தங்களினால் புறமதத்தவர்கள் வேதங்களைக்கெடுக்க, அந்தக் கெடுதல்களை ஆசாரியர் போக்கியருளினர். காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போலவே *நாவலிட்டுழிதருகின்றோம் நமன் தமர் தலைகண்மீதே* (திருமாலை—1) என்ற கணக்கிலே கூத்தாடப் பெறுதலுங்காண்க.

11. குதிரை வடிவங்கொண்டு மஹாபயங்கரனாகவந்த கேசி யென்னு மஸுரனைக் கண்ணபிரான் தொலைத்தருளினன்; அதுபோல நம் பேராசிரியர் *இந்த்ரியாணி ஹயாநாஹு:* என்ற உபநிஷத்தின் படியே குதிரைகளாகச் சொல்லப்பட்ட இந்திரியங்களின் வலியையடக்கி ஜிதேந்த்ரியராய் *காமாதிதோஷ ஹராமாத்மபதாச்ரிதா நாம்* என்றும் *மதநகதநைர் நக்லிச்யந்தே யதீச்வராஸம்ச்ரயா:* என்றும் சொல்லும் படி வாழ்ந்தவர்.

12. கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஓரசுரன் விளாமரத்தின் வடிவமாய், தன் கீழே கண்ணன் வரும்போது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்கவும், மற்றோரசுரன் கண்ணனை முட்டிக் கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு நிற்கவும் இவற்றையறிந்த கண்ணபிரான் "விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே" "கன்றுகொண்டு விளங்கனி யெறிந்து" என்கிறபடியே கன்றைச்சுழற்றி விளவின்மீதெறிந்து இரண்டையும் ஒருசேரமுடித்தருளினன் என்றவரலாறு முள்ளைக்கொண்டே முள்ளைக் களைகின்றபடியைக் காட்டுகின்றது. இதுபோலவே ஸ்வாமி ஸ்ரீபாஷ்யகாரர் புறமதங்களைக் கண்டிக்குமிடத்து அவை பரஸ்பரவ்யாஹதங்களாயிருக்கும்படியை நன்கு நிரூபித்துக்காட்டி அவைகளைக்கொண்டே அவற்றை மறுத்தொழிப்பவர்.

13. இடையர்கள் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜை செய்யப் பற்பல வண்டிகளில் சோறும், தயிரும், நெய்யும், காய்கறிகளும் சேகரிப்பதைக்கண்டு கண்ணன் அப்பூசனையனைத்தையும் கோவர்த்தனமலைக்கே இடும்படி கட்டளையிட்டுத் தானே ஒரு தேவதா ரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள, இந்திரன் பசிக்கோபத்தினால் மேகங்களை ஏவிக் கடோமான கல்மழையை ஏழு நாள் பெய்விக்க, அதனால் யார்க்கும் யாதொரு தீங்கும் நேரிடாதபடி கண்ணன் அம்மலையையே குடையாக வெடுத்துப்பிடித்து நின்றனன் என்பது ப்ரஸித்தமான கதை. தேவதாந்தரத்திற்கு வழிபாடு செய்வதைப் பொறாத தன்மையும் அந்த வழிபாடுகளையெல்லாம் தானே யேற்றுக்கொள்ளுந்தன்மையும், அதனால் எதிரி என்ன தீங்கு செய்ய நினைத்தாலும் அதற்குப் பிரதியாகத் தீங்கிழைக்க நினையாத பெருந்தகவும், தன்னையடுத்தவர்களைத் தான் ரக்ஷித்துக்கொண்டு நிற்றலுமாகிய விஷயங்கள் இவ்விதிஹாஸத்தில் கிடைக்கின்றன. *மறந்தும் புறந்தொழாமாந்தர்* என்றிருக்குமாசிரியர் தேவதாந்தரபஜனத்தைச் சிறிதும்ஸஹியார். "திருவில்லாத்தேவரைத் தேறேல்மின் தேவு" என்று துணிந்து உபதேசிப்பர். *ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் த்நும், மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா* என்றும் *பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகிவந்து* என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமானே ஆசாரியனாக வந்து பிறந்ததனால் ஆராதனைகளெல்லாம் ஆசார்யனுக்கே சேரும். "குற்றஞ்செய்தவர்கள்பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" [ஸ்ரீவசனபூஷணம் 365] என்றிருப்பவர் ஆசார்யராகையாலே தீங்கிழைப்பார் திறத்திலும் பிரதியாகத் தீங்கிழைக்க நினையார் பெருமழையில் நின்றும் கண்ணன் காத்தருளினதுபோல *அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி — பவதுர்த்திநே* [ஸ்தோத்ரரத்நம்-49] என்னப்பட்ட பெருமழையில் நின்றும் (அதாவது, ஸம்ஸாரத் துயர்ப் பெருமழையினின்றும்) காத்தருளினார். கண்ணன் ஏழுநாள் காத்தனன். ஆசிரியர் காப்பது ஏழேழ் பிறவிக்கும்.

14. கண்ணன் நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொள்ளுதற்காக, அவளது தந்தை கந்யா சுல்கமாகக் குறித்தபடி அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளை வலியடக்கி அப்பிராட்டியை மணஞ் செய்துகொண்டனன். நம் பரமாசார்யர் "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம் போலே திருமந்த்ரம்" [முமுக்ஷுப்படி 113] என்கிறபடியே திருமந்த்ரமாகிற திருமங்கலியத்தை சேதநர்களுக்குக் கட்டி விவாஹம் நடத்துகைக்கு அங்கமாக, காமம், குரோதம், லோபம், மோஹம், மதம் மாத்ஸர்யம் அஸூயை என்கிற ஏழு விரோதிகளையும்தொலைத்தருளினர்

15. கண்ணன் இரண்டு மல்லர்களை மடித்ததுபோல ஆசிரியர் *நீர்நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து* என்கிறபடியே அஹங்கார மமகாரங்களை யடியறுத்தவர். கண்ணன் குவலயா பீடமென்கிற மதயானையை முடித்தாப்போலே "மதக்களிறைந்தினையும் சேரி திரியாமல் செந்நிறீஇ" என்கிற பொய்கையார் பாசுரத்தின்படியே மதகளிறாகிய இந்திரியத்தின் துஷ்டத்தன்மையைத் தொலைத்தவர். கண்ணன் மாலாகாரர் திருமாளிகைக் செழுந்தருளி அவர் தந்த பூவைப்பெற்று உகந்ததுபோல நம் ஆசிரியர் *அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ:, ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமாபுஷ்பம் விசேஷத:. ஜ்ஞாநம் புஷ்பம் தப:புஷ்பம் த்யாநம் புஷ்பம் ததைவச, ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத்* என்னப்பட்ட எண்பகர் பூவையும் சிஷ்யர்கள்பக்கலிலே செழித்து வளரக் காணப்பெற்றுக் களித்தமையறிக

16. கண்ணபிரான் கம்ஸ சிசுபால கௌரவ ப்ரப்ருதிகளை முடித்துப் பஞ்ச பாண்டவாதிகளை வாழ்வித்ததுபோல நம் பரமாசார்யர் *தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும் நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனரொன்னும்படியாக *நாட்டிய நீசச் சமயங்களை மாள்வித்து அர்த்த பஞ்சகம் முதலிய விசேஷார்த்தங்களை எங்கும் விளங்கச் செய்தனர். இங்ஙனே மற்றும் பலவுங் காண்க.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

# சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசந சபையின் அறிக்கை

இந்த ஸபை ஆரம்பித்து ஒரு வருஷமாகிறது. ஸபையின் நோக்கப்படி காரியங்கள் ஒழுங்காக நடந்துவருகின்றன. தமிழ் லிபியிலும், தெலுங்கு லிபியிலும் ஒரு வருஷத்திற்கு வெளிவரவேண்டிய புத்தகங்கள் பூர்த்தியாக வெளிவந்துவிட்டன. தமிழ் வெளியீடுகளைப்பற்றி மாத்திரம் இங்குத் தெரிவிக்கப்படுகிறது.

குருபரம்பரா ப்ரபாவமென்கிற பூர்வாசார்ய வைபவம்.
பக்கம் 156. விலை ரூ. 1—4—0

ஆசார்யஹ்ருதய ஸாரம்.
இது இரண்டு பகுதியாக வெளியிடப்பட்டது. பெரிய ஸைஸ் பக்கம் 228. விலை ரூ. 4-0-0.

திவ்ய ப்ரபந்தஸாரத் திரட்டு-
சிறிய ஸைஜ். பக்கம் 80. விலை ரூ. 1—0—0,

பன்னிரு திங்களநுபவம்-
பெரிய ஸைஜ். பக்கம் 132. விலை ரூ. 2—0—0

நித்தியாநுஸந்தானம் மூலம்.
சிறிய ஸைஜ். பக்கம் 120. விலை ரூ 1—0—0.

நித்தியாநுஸந்தானம் உரை.
பெரிய ஸைஜ். பக்கம் 176. விலை ரூ. 2—0—0

## கத்யத்ரய வியாக்யானம்

எம்பெருமானார் அருளிச்செய்த "கத்யத்ரயத்திற்கு" மிகவும் எளிய நடையில் தெளிவானவுரை வெளிவந்துவிட்டது. இப்பத்திரிகை யாசிரியரால் எழுதப்பட்ட உரை. தேவநாகரி, க்ரந்தம், தமிழ் மூன்று லிபியிலும் மூலமுள்ளது. விலை ரூ. 1—2—0.

ஸ்ரீரஸ்து

பத்மாவதீஸமேத ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:

அலர்மேல்மங்கையுறைமார்பனடியிணை வாழி.

## 2. திருவேங்கடமுடையான் விஷயமான ஸ்தோத்ரம்

மணவாளமாமுனிகள் திவ்ய தேச யாத்திரையாக எழுந்தருளுமளவில் திருமலைக்கெழுந்தருளின காலத்துத் தமது திருவடிகளில் ஒருவரான அண்ணனுக்கு நியமிக்க, அவர் பணித்த ஸ்துதி.

# * ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம் *

[திருமலையில் அன்றுதொட்டு நாடோறும் ஸுப்ரபாத காலத்தில் நியமேந அநுஸந்திக்கப்பட்டு வருவது.]

## ॥ श्रीवेङ्कटेशस्तोत्रम् ॥

**कमलाकुचचूचुककुङ्कुमतो नियतारुणितातुलनीलतनो ।**
**कमलायतलोचन लोकपते विजयी भव वेङ्कटशैलपते ॥ १ ॥**

கமலாகுசசூசுககுங்குமதோ நியதாருணிதாதுலநீலதநோ ।
கமலாயதலோசந லோகபதே விஜயீ பவ வேங்கடசைலபதே ! (1)

| | |
|---|---|
| கமலா குச சூசுக குங்குமத: | பெரிய பிராட்டியாருடைய திருமுலைத் தடங்களிலணிந்த குங்குமக்குழம்பினால் |
| நியத அருணித அதுல நீல தநோ | எப்போதும் சிவப்புப் பெற்று ஒப்பற்று விளங்காநின்ற நீலமேனியையுடையாய்! |
| கமல ஆயத லோசந! | அரவிந்தம் போன்று நீண்ட கண்ணினாய்! |
| லோகபதே | உலகங்கட்கெல்லாமிறைவனே! |
| வேங்கட சைல பதே! | திருவேங்கடமலைக்கிறைவனே! |
| விஜயீ பவ | நித்யஸ்ரீர் நித்ய மங்களமாக விளங்குவாயாக. |

* * * திருவேங்கடமுடையானுக்கு மங்களாசாஸனம் செய்வது இந்த ச்லோகம். இதில் பூர்வார்த்தம் முழுவதும் ஒரு ஸம்போதநம். ❊ அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா! ❊ என்ற அருளிச்செயலின் பொருளைப் பர்யாயமாக அநுஸந்தித்தபடி. பெரிய பிராட்டியாருடைய திருமுலைத் தடங்களிலே மங்களாலங்காரமாகக் குங்குமச்சாறு அணிந்திருப்பதுண்டே; அது நித்ய ஸம்ச்லேஷத்தினால் உறைந்துறைந்து எம்பெருமானுடைய நீலமேனியானது செந்நிறமாயிற்றென்கிற இந்த அதிசயோக்தியினால் திவ்ய தம்பதிகளின் இணைபிரியாமை தெரிவிக்கப்பட்டதாகும். "இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை; ஈச்வரஸ்வாதந்த்ர்யத்தையும் சேதநனுடைய அபராதத்தையும் கண்டு அகலமாட்டாள்" என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம். ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி பகவானுக்கு ஸ்வரூபநிரூபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிரூபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வர வஸ்துவின் ஸத்தையாம். சேதநர்களின் அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்க வல்லவனான ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியத்தையும் சேதநர் செய்யும் குற்றங்களின் அளவின்மையையுங் கண்டு 'ஐயோ! என்னாகுமோ!' என்கிற பயத்தினால் ஈச்வரனைவிட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாளென்க.

சூசுகம்— "**चूचुकं तु कुचाग्रं स्यात्** — சூசுகம் து குசாக்ரம் ஸ்யாத்" என்ற அமரகோசத்தின்படி ஸ்தநத்தின் அக்ரபாகம் சூசுகமெனப்படும். கரிகலப, கர்ணவதம்ஸாதி ப்ரயோகம் போலே இங்கு குச சப்தப்ரயோகம் மிகையாகாது. "கொவ்வைவாய் மகளிர் கொங்கைக் குங்குமங் கழுவிப்போந்த தெய்வநீர் கமழுநாங்கூர்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தினாலும் மாதர்கள் முலைத்தடங்களில் குங்குமச் சேறு அணிதல் தெரியவரும். [கமலாயதலோசந!] கமலம் போன்றவையாயும் ஆயதங்களாயுமிருக்கின்ற திருக்கண்களையுடையாய்! என்கை. கமலம் ஆயதத்வத்திற்கு உவமையன்றென்க. .... .... (1)

सचतुर्मुखषण्मुखपञ्चमुखप्रमुखाखिलदैवतमौलिमणे ।
शरणागतवत्सल सारनिधे परिपालय मां वृषशैलपते ॥ २ ॥

ஸசதுர்முகஷண்முகபஞ்சமுகப்ரமுகாகிலதைவதமௌலிமணே!
சரணாகதவத்ஸல! ஸாரநிதே! பரிபாலய மாம் வ்ருஷசைலபதே! (2)

| | |
|---|---|
| ஸசதுர்முக ஷண்முக பஞ்சமுக ப்ரமுக அகில தைவத மௌலி மணே! | நான்முகக் கடவுளோடு கூடிய ஸுப்ரம்மண்யன் சிவன் முதலான ஸகல தெய்வங்களுக்கும் சிரோபூஷணமாக விளங்குமவனே! |
| சரணாகத வத்ஸல | அடிபணிந்தவர்கள் பக்கலிலே வாத்ஸல்யமுடையவனே! |
| ஸாரநிதே | ... சிறந்த நிதி போன்றவனே! |
| வ்ருஷசைல பதே | வ்ருஷபகிரி யென்னப்படுகிற திருமலைக்கு இறைவனே! |
| மாம் பரிபாலய | அடியேனைக் காத்தருள வேணும். |

* * * "யாம் கடவுளென்றிருக்குமெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் நீ" என்றபடி தெய்வமென்று பேர் சுமக்கின்ற ஸகல தெய்வங்களுக்கும் தலையான தெய்வமே! சரணாகதர் பக்கலில் வாத்ஸல்யமே வடிவெடுத்தவனே! சிறந்த நிதி போன்றவனே! திருமலையப்பனே! அடியேனுக்கு அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான இஷ்டப்ராப்தியைச் செய்தருளவேணுமென்றபடி.

ஷண்முக பஞ்சமுகர்களை சதுர்முகனோடு கூடியிருப்பவர்களாகச் சொன்னது ஸமுச்சய தாத்பர்யகம்; பிரமனும் கந்தனும் சிவனுமாகிய தெய்வங்களுக்குத் தலைவனே! என்றவாறு. "நோலாதாற்றேனுனபாதங் காணவென்று நுண்ணுணர்வின் நீலார்கண்டத்தம்மானும் நிறை நான்முகனுமிந்திரனும் சேலேய் கண்ணார் பலர் சூழவிரும்பும் திருவேங்கடத்தானே!" என்ற திருவாய்மொழிப் பாசுரம் பூர்வார்த்தத்திற்குச் சேர அநுஸந்தேயம்.

❋ அகலகில்லேனிறையுமென்கிற பாசுரத்தில் ❋ நிகரில் புகழாய் ❋ என்றவிடத்திற்கு வியாக்கியானஞ் செய்தருளின பூருவாசார்யர்கள் வாத்ஸல்ய குணத்தையே நிகரில் புகழாக நிரூபித்தருளினபடியாலே இங்கு விசேஷித்து ❋ சரணாகதவத்ஸல ❋ என்றது. உடனே ஸாரநிதே! என்றது ஸாரமான குணங்களுக்கெல்லாம் கொள்கலமானவனே! என்றபடி. முந்தின ச்லோகத்தில் புருஷகாரபூதையான பிராட்டியின் ப்ரஸ்தாவமிருக்கையாலே, அந்த புருஷகாரபலத்தாலே எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியமானது தலைமடிந்து தலையெடுக்குங் குணங்களான வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளைச் சொல்லவேண்டுவது அவசியம். குணங்கள் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களென்றும் ஆச்ரித கார்யாபாதகங்களென்றும் இரண்டு வகுப்பாயிருக்கும். அஞ்சாமல் கூசாமல் நாம் ஆச்ரயிக்கும்படி அநுகூலப்படுத்துகின்ற குணங்கள் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களெனப்படும். ஆச்ரயித்த பிறகு காரியம் தலைக்கட்டும்படி செய்யுங் குணங்கள் ஆச்ரித கார்யாபாதகங்களெனப்படும். வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் என்கிற குணங்கள் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களாம். ஜ்ஞாந சக்திகள் ஆச்ரித கார்யாபாதகங்களாம். ஆச்ரயிக்கவொருப்படுகின்ற இச்சேதநன் தன் தோஷங்களைப் பார்த்து அஞ்சும்போது தோஷபோக்யத்வரூபமான வாத்ஸல்யத்தை நினைத்து அந்த அச்சம் தீரலாம். இந்த வாத்ஸல்யமே தலையான குணமென்பதை ஸ்வாமி யெம்பெருமானாரும் கத்யத்திலே விளங்கக் காட்டியருளினர். எங்ஙனேயென்னில்; ❋ அபார காருண்ய-ஸௌசீல்ய-வாத்ஸல்ய-ஔதார்ய-ஐச்வர்ய-ஸௌந்தர்ய மஹோததே! ❋ என்று வாத்ஸல்யமுமுட்பட எடுத்தெடுத்தியிருக்கச் செய்தேயும் மீளவும் ❋ ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதே! ❋ என்று தனிப்படவுமருளிச் செய்தாரிறே.

[ஸாரநிதே!] "**सारो बले स्थिरांशे च न्याय्ये क्लीबं वरे त्रिषु** — ஸாரோ பலே ஸ்திராம்சே ச ந்யாய்யே க்லீபம் வரே த்ரிஷு" என்ற அமரகோசத்தின்படி அங்குச் சொன்ன பொருள்களடங்கலும் இங்குக் கொள்ளத் தகும். ஸாரமான குணங்களுக் கெல்லாம் நிதிபோன்றவனே! சிறந்த நிதி போன்றவனே! என்று இரண்டு வகையாகவும் பொருள் கொள்ளலாம். எம்பெருமானை ஆழ்வார்கள் நிதியாகப் பேசியநுபவித்தார்கள். "நிதியே திருநீர்மலை நித்திலத் தொத்தே!" "நிதியினைப் பவளத்தூணை" "வைத்தமாநிதியாம் மதுசூதனன்" என்றிங்ஙனே பல பாசுரங்கள் காண்க. ❋ அந்தர்ஹிதோ நிதிரஸி த்வம் அசேஷபும்ஸாம் லப்யோஸி புண்ய புருஷைரிதரைர் துராப: ❋ என்று ஆழ்வானும் ❋ மாயாநிகூடமநபாயமஹார்நிதிம் த்வாம் ❋ என்று தேசிகனும் பணித்தார்கள். நிதியானது ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதபடி மறைந்து கிடக்கும்; எம்பெருமானும் ❋ இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் ❋ கரந்தெங்கும் பரந்துளன் ❋ என்பவை முதலான பாசுரங்களின் படியும் ❋ கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று ❋ என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியின் படியும் கட்கிலியாயிருப்பன். மறைந்து கிடக்கும் நிதியானது சில பாக்ய சாலிகளுக்கே புலப்படுமா போலே எம்பெருமானும் ❋ யானே தவஞ்செய்தேன் ❋ ❋ கோராமாதவம் செய்தனன் கொலறியேன் ❋ என்னும்படியான சில பாக்யசாலிகளுக்கே புலப்பட்டான். ஒருவகையான ஸித்தாஞ்ஜனமணிந்து கொண்டு பார்ப்பவர்களுக்கே நிதி தோன்றுமாபோலே எம்பெருமானும் ❋ மநஸி விலஸதாக்ஷ்ணே பக்திஸித்தாஞ்ஜநேந ❋ என்று பட்டரும் ❋ ஸித்தாஞ்ஜநேந பவதைவ விபூஷிதாக்ஷா: ❋ என்று தேசிகனும் பணித்த படியே பக்தியாகிற ஸித்தாஞ்ஜனமணிந்த திவ்ய சக்ஷுஸ்ஸைப் பெற்றவர்களுக்கே தோன்றுவன். நிதியானது எடுத்தெடுத்தெவ்வளவு அநுபவிக்கப்பட்டாலும் கொள்ளமாளாததாய் அக்ஷய்யமாயிருக்குமா போலே எம்பெருமானும் எனையூழிகாலம் அநுபவிக்கப்பட்டாலும்

குறைவுபடாதே மேன்மேலும் பெருகிக் செல்வன். ❋ உத்காட்ய யோககலயா ❋ என்கிற குவலயாநந்த மங்களச்லோகம் இங்கு நினைக்கத்தகும். ... ... (2)

**अतिवेलतया तव दुर्विषहैरनुवेलकृतैरपराधशतैः ।**
**भरितं त्वरितं वृषशैलपते परया कृपया परिपाहि हरे ॥ ३ ॥**

அதிவேலதயா தவ துர்விஷஹை: அநுவேலக்ருதைரபராதசதை: ,
பரிதம் த்வரிதம் வ்ருஷசைலபதே! பரயா க்ருபயா பரிபாஹி ஹரே (3)

| | | | |
|---|---|---|---|
| வ்ருஷசைல பதே ஹரே! | திருமலையப்பனே! | அபராத சதை: | நூற்றுக்கணக்கான குற்றங்களினால் |
| அதிவேலதயா | கங்கு கரை யில்லாமையினாலே | பரிதம் (மாம்) | நிறைந்திருக்கின்ற அடியேனை |
| தவ துர்விஷஹை: | தேவரீருக்கும் ஸஹிக்கக் கூடாதவைகளாயும் | பரயா க்ருபயா | ... பரமக்ருபையினாலே |
| அநுவேல க்ருதை: | க்ஷணந்தோறும் செய்யப் பட்டவையாயுமிருக்கின்ற | த்வரிதம் பரிபாஹி | விரைந்து காத்தருள வேணும். |

❋ ❋ ❋ எம்பெருமான் ஸர்வாபராதஸஹிஷ்ணுவானாலும் அவன்றனக்கும் அஸஹ்யமாம்படி க்ஷணந்தோறும் எண்ணிறந்த பாபங்களைச் செய்துபோராநின்றோமிறே. நோயாளியானவன் மருத்துவன்பக்கலிலே தனது உண்மையான அபத்யங்களைச் சொல்லிக்கொண்டு புகுந்து பரிஹாரம் பெறுமா போலே பாபிகளான நாமும் பகவத்ஸந்நிதியிலே உள்ளவாறு நமது பாபபூயிஷ்டதையைச் சொல்லிக்கொண்டு புகவே பரிஹாரம் பெறலாமிறே. அஸ்மதாதிகளின் அநுஸந்தானத்திற்காகவிறே பூருவர்கள் இங்ஙனே ச்லோகங்களும் பாசுரங்களும் பணித்து வைத்தது.

வேலாம் அதிக்ராந்தம் அதிவேலம்; வேலையாவது கரை; கரை கடந்திருப்பதனாலே யென்றபடி. தவ என்பதனோடே அபிசப்தமும் கூட்டிக்கொள்ளத்தக்கது; ஸர்வஸஹிஷ்ணுவென்று விருதுபடைத்த தேவரீர் தமக்கும் ஸஹிக்கவொண்ணாதபடியன்றோ எம்முடைய பாவங்கள் கூடுபூரித்துக் கிடக்கின்றனவென்கை. அநுவேலமென்றது க்ஷணந்தோறுமென்றபடி. "வேலா காலமர்யாதயோரபி" என்பது அமரகோசம். .... ... (3)

**अधिवेङ्कटशैलमुदारमतेः जनताभिमताधिकदानरतात् ।**
**परदेवतया गदितान्निगमैः कमलादयितान्न परं कलये ॥ ४ ॥**

அதிவேங்கடசைலமுதாரமதே: ஜநதாபிமதாதிகதாநரதாத்,
பரதேவதயா கதிதாந்நிகமை: கமலாதயிதாந்ந பரம் கலயே (4)

| | | | |
|---|---|---|---|
| அதிவேங்கடசைலம் | திருமலையில் (எழுந்தருளியிருக்கிற) | ஜநதா அபிமத அதிக தாந ரதாத் | அவரவர்கள் விரும்புவதிற் காட்டிலும் அதிகமாகவே அளித்தருளவல்லவரும் |
| உதாரமதே: | ஔதார்யம் மிகுந்த திருவுள்ளமுடையவரும் | | |

| | |
|---|---|
| நிகமை: பரதேவதயா கதிதாத்கமலாதயிதாத் | வேதங்களினுல் பரதெய்வமாக ஓதப்பட்டவரும் லக்ஷ்மீபதியுமான எம்பெருமானிற் காட்டிலும் |
| பரம் | ... வேருனதொரு வஸ்துவை |
| ந கலயே | ... எண்ணுகின்றிலேன். |

❋ ❋ ❋ பரமோதாரனுப் வேதாந்தவேத்ய பரதேவதையான திருமாலே திருமலையில் ஸேவை ஸாதித்தருளாநின்றபடியால் ❋ மற்ருேர் தெய்வம் நான் மதிக்கிலேனென்கிருர். அதிவேங்கடசைலம்—அவ்யயீபாவஸமாஸம். ❋ ஹறௌ - அதிஹறி ❋ என்னுமா போலே. [உதாரமதே:] ஔதார்யத்தை எம்பெருமானிடத்தில் ஸாக்ஷாத்தாகச் சொல்லாமல் மதியிலேயிட்டுச் சொன்னது— அடியார்க்கு எவ்வளவு கொடுத்தாலும் ஒன்றுங்கொடுக்கப் பெற்றிலோமென்றும் இன்னமுங் கொடுக்கவேணுமென்றுமிருக்கிற ஹ்ருதயவைசால்யத்தைச் சொன்னபடி. ❋ ஒன்றுண்டு செங்கண்மால் யானுரைப்பது, உன்னடியார்க்கு என் செய்வனென்றேயிருத்தி நீ ❋ என்ற பெரிய திருவந்தாதிப்பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தகும். ஜநதாபிமத தாநரதாத் என்னுதே "அதிகதாநரதாத்" என்றது ❋ அர்த்திதார்த்தபரிதாந தீக்ஷிதரான தேவப்பெருமாளிற் காட்டில் வாசி சொன்னபடி. நிகமை: என்றது வேதாந்தங்களென்ற விவக்ஷையாலே. .... ... ... ... (4)

कलवेणुरवावशगोपवधूशतकोटिवृतात् स्मरकोटिसमात् ।
प्रतिवल्लवि चाभिमतात्सुकृतात् वसुदेवसुतान्न परं कलये ॥ ५ ॥

கலவேணுரவாவசகோபவதூசதகோடிவ்ருதாத் ஸ்மரகோடிஸமாத்;
ப்ரதிவல்லவி சாபிமதாத் ஸுக்ருதாத் வஸுதேவஸுதாந்ந பரம் கலயே. (5)

| | |
|---|---|
| கல வேணுரவ அவச கோபவதூ சதகோடி வ்ருதாத் | அதிமதுரமான வேணுநாதத்திற்குப் பரவசப்பட்ட ஆய்ச்சிகளின் திரளால் சூழப்பட்டவனும் |
| ஸ்மர கோடி ஸமாத் | கோடிக்கணக்கான மன்மதர்களையொத்தவனும் |
| ப்ரதிவல்லவி ச அபிமதாத் | ஒவ்வொரு ஆய்ச்சியும் நமக்கே கணவனென்று அபிமானித்திருக்கப்பெற்றவனும் |
| ஸுக்ருதாத் | ஸாக்ஷாத் தர்மஸ்வரூபியுமான |
| வஸுதேவ ஸுதாத் | ... வாஸுதேவனிற்காட்டிலும் |
| பரம் ந கலயே | வேறொருவரை எண்ணுகின்றிலேன். |

❋ ❋ ❋ இந்த ச்லோகம் முதலாக நான்கு ச்லோகங்களினுல் திருவேங்கடமுடையானைக் கண்ணபிரானுகவும் இராமபிரானுகவுங் கொண்டு ஏத்துகிருர். இந்த ச்லோகம் கண்ணபிரானுகை வைத்துத் துதிக்கிறது. ❋ பொங்கு புள்ளினைவாய் பிளந்த புராணர்தம்மிடம்—திருவேங்கடம் ❋ என்றும், ❋ கன்றிமாரிபொழிந்திடக் கடிதாநிரைக்கு இடர் நீக்குவான் சென்று குன்றமெடுத்தவன் திருவேங்கடம் ❋ என்றும் ஆழ்வார்கள் காட்டினவழியே யிது.

❋ தூவலம் புரியுடைய திருமால் தூயவாயிற்குழலோசை வழியே கோவலர் சிறுமியரிளங்கொங்கை குதுகலிப்ப உடலுளவிழ்ந்து எங்கும் காவலுங் கடந்து கயிறுமாலையாகி வந்து கவிழ்ந்து நின்றனரே ❋ என்னும்படியே திருக்குழலோசையில் பரவசப்பட்ட கோபிகளோடு குரவைகோத்த குழகன் என்கிறது முதல் விசேஷணம். ❋ ஸாக்ஷாந்மந்மதமந்மத: ❋ என்னும்

✻ ✻ ✻ தயரதற்கு மகன் தன்னையன்றிமற்றிலேன் தஞ்சமாகவே ✻ என்றும் ✻ கற்பாரி ராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ ✻ என்றும் ✻ சிலையினாலிலங்கை செற்ற தேவனே தேவனாவான் ✻ என்றுமுள்ள பாசுரங்களையடியொற்றி அருளிச்செய்ததாமிது. .... (8)

**विना वेङ्कटेशं न नाथो न नाथः सदा वेङ्कटेशं स्मरामि स्मरामि ।**
**हरे वेंकटेश प्रसीद प्रसीद प्रियं वेंकटेश प्रयच्छ प्रयच्छ ॥ ९ ॥**

விநா வேங்கடேசம் ந நாதோ ந நாத: ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி,
ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச. (9)

| | | | |
|---|---|---|---|
| வேங்கடேசம் விநா நாத: ந, நாத: ந | திருவேங்கடமுடையானைத் தவிர்த்து வேறொரு நாதனில்லையென்பது ஸத்யம், | ஹரே வேங்கடேச! ப்ரஸீத ப்ரஸீத | ஸகல தாபங்களையும் ஹரிக்கவல்ல அப்பனே! திருவுள்ளம் மிகவுமுகந்தருளவேணும்; |
| வேங்கடேசம் ஸதா ஸ்மராமி ஸ்மராமி | திருவேங்கடமுடையானை அநவரதமும் நினைத்தபடியேயிருக்கின்றேன்; | வேங்கடேச! ப்ரியம் ப்ரயச்ச ப்ரயச்ச | திருவேங்கடத்தெம் பெருமானே! நன்மையைப் பயந்தருளினபடியேயிருக்கவேணும். |

இதில் ஒவ்வொரு பாதத்திலுமுள்ள த்விருக்திகள் ஆதராதிசயத்தாலானவை. • (9)

**अहं दूरतस्ते पदाम्भोजयुग्मप्रणामेच्छयागत्य सेवां करोमि ।**
**सकृत्सेवया नित्यसेवाफलं त्वं प्रयच्छ प्रयच्छ प्रभो वेंकटेश ॥ १० ॥**

அஹம் தூரதஸ் தே பதாம்போஜயுக்மப்ரணாமேச்சயாகத்ய ஸேவாம் கரோமி,
ஸக்ருத் ஸேவயா நித்யஸேவாபலம் த்வம் ப்ரயச்ச ப்ரயச்ச ப்ரபோ வேங்கடேச!. (10)

| | | | |
|---|---|---|---|
| வேங்கடேச ப்ரபோ! | திருவேங்கடத்தெம் பெருமானே! | ஸேவாம் கரோமி | (அத்திருவடிகளில்) ஸேவை செய்கின்றேன்; |
| அஹம் | ... அடியேன் | ஸக்ருத் ஸேவயா | ஏதோவொருகால் செய்யும் ஸேவையினால் |
| தே பதாம்போஜயுக்ம ப்ரணாம இச்சயா | உன்னுடைய இணைத்தாமரையடிகளை வணங்கும் விருப்பத்தினால் | நித்ய ஸேவா பலம் | நித்யமும் ஸேவிப்பதனாலாகும் பலனை |
| தூரத: ஆகத்ய | தூரதேசத்திலிருந்து வந்து | த்வம் ப்ரயச்ச ப்ரயச்ச | நீ அவசியம் கொடுக்கவேணும். |

✻ ✻ ✻ தெழிகுரலருவித் திருவேங்கடத்து எழில்கொள் சோதியெந்தை தந்தை தந்தைக்கு— ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம் ✻ என்கிற பாரிப்பு குறையற்றிருக்கச் செய்தேயும் திருமலையிலேயே நித்யவாஸம் பண்ணிக் கொண்டு நித்ய கைங்கரியம் செய்துகொண்டிருக்க இயலாமையினாலே கதாசித் ஸக்ருத் வந்து ஸேவிக்கின்றேன்; ஆனாலும் ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி ஸேவிப்பதாகவே திருவுள்ளம்பற்றி உகந்தருளவேணுமென்கிறார். அநந்யப்ரயோஜநமாக ஸேவிக்குமதிகாரிகள்

"நித்யஸேவாபலம் ப்ரயச்ச" என்று ஒரு பலனை விரும்பக்கூடுமோவென்னில்; அத்தலையில் திருவுள்ளவுகப்பேயாயிற்று இங்குப் பலனாகக் கருதப்படுவது. * கதாஹமைகாந்திகநித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவித: * என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியிலே * ப்ரஹர்ஷயிஷ்யாமி * என்ற உயிரான வாசகம் நினைக்கத்தக்கது. .... .... 10

वृषशैलाधिप एव दैवतं नः वृषभाद्रीश्वर एव दैवतं नः ।
फणिशैलाधिप एव दैवतं नः भगवान् वेंकट एव दैवतं नः ॥ ११ ॥

வ்ருஷசைலாதிப ஏவ தைவதம் ந: வ்ருஷபாத்ரீச்வர ஏவ தைவதம் ந:,
பணிசைலாதிப ஏவ தைவதம் ந: பகவாந் வேங்கட ஏவ தைவதம் ந:. (11)

வ்ருஷசைலமென்பதும் வ்ருஷபாத்ரியென்பதும் பணிசைலமென்பதும் திருவேங்கடமலைக்கே பர்யாயநாமங்களாதலால் எல்லாவற்றாலும் திருமலையப்பனே அடியேன் தொழும் தெய்வமென்றதாயிற்று. .... .... ... .... .... 11

श्रीश्रीनिवासः परदैवतं नः श्रीश्रीनिवासः परमं धनं नः ।
श्रीश्रीनिवासः कुलदैवतं नः श्रीश्रीनिवासः परमा गतिर्नः ॥ १२ ॥

ஸ்ரீஸ்ரீநிவாஸ: பரதைவதம் ந: ஸ்ரீஸ்ரீநிவாஸ: பரமம் தநம் ந:,
ஸ்ரீஸ்ரீநிவாஸ: குலதைவதம் ந: ஸ்ரீஸ்ரீநிவாஸ: பரமா கதிர் ந:. (12)

ஸ்ரீ ஸ்ரீநிவாஸனே நமக்குப் பரதேவதையும் பெருஞ்செல்வமும் குலதேவதையும் பரமகதியுமாவான் என்றாராயிற்று. .... .... ... ... 12

अज्ञानिना मया दोषानशेषान् विहितान् हरे ।
क्षमस्व त्वं क्षमस्व त्वं शेषशैलशिखामणे ॥ १३ ॥

அஜ்ஞாநிநா மயா தோஷாந் அசேஷாந் விஹிதாந் ஹரே,
க்ஷமஸ்வ த்வம் க்ஷமஸ்வ த்வம் சேஷசைலசிகாமணே. (13)

சேஷசைலமாகிற திருவேங்கடமலையுச்சியில் நீலமணி போல் விளங்குமெம்பெருமானே! அவிவேகியான அடியேன் செய்த குற்றங்களையெல்லாம் நிர்ஹேதுகக்ருபையினாலே க்ஷமித்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. ... .... ... 13

ईशानां जगतोऽस्य वेङ्कटपतेः विष्णोः परां प्रेयसीं तद्वक्षस्स्थलनित्यवासरसिकां तत्क्षान्तिसंवर्धिनीम् ।
पद्मालंकृतपाणिपल्लवयुगां पद्मासनस्थां श्रियं वात्सल्यादिगुणोज्ज्वलां भगवतीं वन्दे जगन्मातरम् ॥ १४ ॥

ஈசாநாம் ஜகதோஸ்ய வேங்கடபதேர் விஷ்ணோ: பராம் ப்ரேயஸீம்
தத்வக்ஷஸ்ஸ்தலநித்யவாஸரஸிகாம் தத்க்ஷாந்திஸம்வர்த்திநீம்,
பத்மாலங்க்ருதபாணிபல்லவயுகாம் பத்மாஸநஸ்தாம் ச்ரியம்
வாத்ஸல்யாதிகுணோஜ்ஜ்வலாம் பகவதீம் வந்தே ஜகந்மாதரம். (14)

| | |
|---|---|
| அஸ்ய ஜகத: ஈசாநாம் | இவ்வுலகுக்கெல்லாம் ஈச்வரியாயும் |
| வேங்கடபதே: விஷ்ணோ: பராம் ப்ரேயஸீம் | திருமலையப்பனுக்கு ப்ராண வல்லபையாயும் |
| தத் வக்ஷஸ்ஸ்தல நித்யவாஸ ரஸிகாம் | அவனது திருமார்பிலேயே நித்யவாஸஞ் செய்வதில் விருப்பமுடையவளாயும் |
| தத் க்ஷாந்தி ஸம்வர்த்திநீம் | அப்பெருமானுடைய க்ஷமா குணத்தை வளரச்செய்ப வளாயும் |
| பத்ம அலங்க்ருத பாணி பல்லவ யுகாம் | தாமரைமலரினால் அலங் கரிக்கப்பட்டுப் பல்லவம் போன்ற இரண்டு திருக் கைகளையுடையவளாயும் |
| பத்ம ஆஸந ஸ்தாம் | தாமரைத் தவிசில் வீற் றிருப்பவளாயும் |
| வாத்ஸல்ய ஆதி குண உஜ்ஜ்வலாம் | வாத்ஸல்யம் முதலிய குணங்களால் திகழாநின்ற வளாயும் |
| பகவதீம் | ... பரம பூஜ்யையாயும் |
| ஜகத் மாதரம் | உலகுக்கெல்லாம் தாயாயு மிருக்கின்ற |
| ச்ரியம் | அலர்மேல்மங்கைப் பிராட்டியை |
| வந்தே | அடியேன் வணங்குகின் றேன். |

❋ ❋ ❋ ❋ அஸ்யேசாநோ ஜகதோ விஷ்ணுபத்நீ ❋ என்ற ச்ருதிச்சாயையிலே பணித்த தாயிற்று ப்ரதம பாதம். "அவன் மார்பைவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது" என்கிற ஸ்ரீஸூக்திக்குச் சேர ❋ தத்வக்ஷஸ்ஸ்தலநித்யவாஸரஸிகாம் ❋ என்றது. "**अस्ति कर्माहफलदे पत्यौ कृत्यद्वयं श्रियः । निग्रहाद्वारणं काले संधुक्षणमनुग्रहे** "॥ – அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய: , நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே " என்கிற தேசிக ஸ்ரீஸூக்தியைுட்கொண்டு தத்க்ஷாந்திஸம்வர்த்திநீம் என்றது. "புருஷகாரபலத்தாலே ஸ்வாதந்த்ரியம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்" [முமுக்ஷுப்படி] என்றவிடத்து அர்த்த விசேஷங்கள் இங்கே அநுஸந்தேயம். [பத்மாலங்க்ருதேத்யாதி.] ❋ பத்மப்ரியே பத்மிநி பத்மஹஸ்தே ❋ இத்யாதி ஸ்ரீஸூக்தமிங்கே அநுஸந்தேயம். [வாத்ஸல்யாதிகுணோஜ்ஜ்வலாம்] ❋ ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரித ஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம் ❋ என்ற தேசிக ஸூக்தியை ஸ்மரிப்பது. ஆக இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த பிராட்டியைத் தொழுகின்றமை கூறி ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டினாராயிற்று. ... ... .... 14

பிரதிவாதி பயங்கரம் அண்ணன் அருளிச் செய்த வேகங்டேச ஸ்தோத்ரம் முற்றிற்று.

அலர்மேல்மங்கையுறைமார்பனடியிணை வாழி.

---

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காராச்சாரியார் இயற்றிய ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரவுரை முற்றிற்று.

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

தேவப்பெருமாள் விஷயமான ஸ்தோத்ரங்கள்.

திருக்கச்சி நம்பிகள் அருளிச்செய்த

# தேவராஜாஷ்டகம்

---

**தனியன்கள்**

**श्रीमत्काञ्चीमुनिं वन्दे कमलापतिनन्दनम् । वरदांघ्रिसदासङ्गरसायनपरायणम् ॥**

ஸ்ரீமத்காஞ்சீமுநிம் வந்தே கமலாபதிநந்தநம்,
வரதாங்க்ரிஸதாஸங்கரஸாயநபராயணம்.

தேவப்பெருமாளுடைய திருவடிகளிலே இடைவிடாது அன்பு பூண்டிருத்தலாகிற ரஸாயந ஸேவையிலே ஊற்றமுடையவரும், கமலாபதியென்பவருடைய திருக்குமாரருமான திருக்கச்சிநம்பிகளைத் தொழுகின்றேனென்கை.

காஞ்சீமுநிம் என்றது காஞ்சீபூர்ண முநிம் என்றபடி. நம்பிகளின் திருத்தகப்பனருக்குக் கமலாபதி என்று திருநாமம் இருந்திருக்குமென்று இந்த ச்லோகத்தினால் ஊஹிக்கலாகிறது. "கமலாபதிம் நந்தயதீதி கமலாபதி நந்தந:" என்று வ்யுத்பத்திகொண்டு எம்பெருமானை உகப்பிக்குமவர் என்று பொருள் கொள்ளலாமாயினும் இதில் ஔசித்யமிருப்பதாகப் புலப்படவில்லை. பெரியார்வாய்க் கேட்டுணர்க.

நம்பிகள் திருவாலவட்டத் திருப்பணி செய்துகொண்டு தேவப்பெருமாளோடு இடைவிடாது வாழ்ந்தவராதலால் உத்தரார்த்தம் மிகப்பொருந்தும். ஆயுர்வேத ப்ரஸித்தமான ஒரு ஔஷத விசேஷத்திற்கு ரஸாயந மென்று பெயர். அதனைப்பருகினர்க்கு அப்ரதிமமான புஷ்டியுண்டாகுமென்பது ப்ரஸித்தம். நம்பிகளுக்குத் தேவப்பெருமாளுடைய திருவடி ஸேவையே ரஸாயந ஸேவா ஸ்தாநீயமாய் விலக்ஷணமான புஷ்டியைத் தந்ததாயிற்று. .... .... (1)

**देवराजदयापात्रं श्रीकाञ्चीपूर्णमुत्तमम् । रामानुजमुनेर्मान्यं वन्देऽहं सज्जनाश्रयम् ॥**

தேவராஜதயாபாத்ரம் ஸ்ரீகாஞ்சீபூர்ணமுத்தமம்,
ராமாநுஜமுநேர் மாந்யம் வந்தேஹம் ஸஜ்ஜநாச்ரயம்.

தேவப்பெருமாளுடைய திருவருளுக்குக் கொள்கலமானவரும், மிகச்சிறந்தவரும் எம்பெருமானார்க்குப் பூஜ்யரும், ஸத்துக்களுக்கு ஆச்ரயபூதருமான திருக்கச்சிநம்பிகளைத் தொழுகின்றேனென்கை.

திருக்கச்சி நம்பிகள் எம்பெருமானருடைய வேண்டுகோளுக்கிணங்கி, தேவப்பெருமாளிடமிருந்து * அஹமேவ பரம் தத்வ மித்யாதியாக ஆறுவார்த்தைகளைப் பெற்று உபகரித்தருளினது பற்றியும், மற்றுஞ் சில இதிஹாஸங்களையுட்கொண்டும் ராமாநுஜமுநேர்மாந்யம் என்றது.

இவ்விரண்டு சுலோகங்களும் பிள்ளைலோகஞ்சீயருடைய சிஷ்யர்களில் ஒருவரான 'இராமானுசப்பிள்ளை' என்பவர் பணித்த 'ஸ்ரீ காஞ்சீ பூர்ணசதகம்' என்கிற ஸ்துதியிலிருந்து எடுத்து அநுஸந்திக்கப்பட்டு வருவதாக விளங்குகிறது.

**தனியன் உரை முற்றிற்று.**

ஸ்ரீ

திருக்கச்சி நம்பிகள் திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீ தேவராஜாஷ்டகம்

**नमस्ते हस्तिशैलेश! श्रीमन्नम्बुजलोचन! । शरणं त्वां प्रपन्नोस्मि प्रणतार्तिहराच्युत! ॥ १ ॥**

நமஸ்தே ஹஸ்திசைலேச ஸ்ரீமந்! அம்புஜலோசந,
சரணம் த்வாம் ப்ரபந்நோஸ்மி ப்ரணதார்த்தி ஹராச்யுத. (1)

---

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய உரை

**श्रीकाञ्चीपूर्ण मुनिभिः प्रणीतां वरदस्तुतिम् । अण्णङ्करार्यदासोयं विवृणोति सतां मुदे ॥**

ஸ்ரீகாஞ்சீ பூர்ண முநிபி: ப்ரணீதாம் வரத ஸ்துதிம்,
அண்ணங்கரார்ய தஸோயம் விவ்ருணோதி ஸதாம் முதே. (1)

ஸ்ரீ ஹஸ்தகிரிநாதனே! பெருந்தேவி மணவாளனே! செந்தாமரைக் கண்ணனே! அடியார்களுடைய துயர்களைத் தீர்த்தருள்பவனே! ஆச்ரிதரை ஒருகாலும் நழுவவிடாதவனே! உனக்கு நமஸ்காரம்; உன்னைச் சரணம் புகுந்தவனாகின்றேனென்கை.

எம்பெருமானுக்குப் பரவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென்று ஐந்து நிலைமைகள் உள்ளனவென்பது ப்ரஸித்தம்; அந்த ஐந்து நிலைமைகளையும் இந்த ச்லோகத்தில் அநுபவிக்கிற அழகு அறியத்தக்கது. இதிலுள்ள ஐந்து ஸம்போதனங்களும் அந்த பஞ்ச ப்ரகாரங்களை நோக்கியிருப்பனவாகும். எங்ஙனே யென்னில்; ஹஸ்திசைலேச! என்றது அர்ச்சாவதாரத்தை நோக்கிய தென்பது ஸ்பஷ்டம். ஸ்ரீமந்! என்பது "வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே" என்கிற பிரமாணப்ரஸித்தியின்படியே பரவாஸுதேவனை நோக்கியதாகும். அம்புஜலோசந! என்பது இந்நிலத்திலே அழகிய வடிவம் பூண்டு அவதரித்த ராமக்ருஷ்ணாதிரூப விபவாவதாரத்தை நோக்கியதாகும். திருக்கண்ணழகைச் சொன்னது ஸர்வாங்க ஸௌந்தர்யத்தையும் சொன்னபடி. ப்ரணதார்த்திஹர! என்றது க்ஷீரஸாகரநிலய வ்யூஹ நிலைமையை நோக்கியதாகும். இடர்ப்பட்டாருடைய கூக்குரல் கேட்டு அவர்களுடைய ஆர்த்தியைத் தீர்ப்பதற்காகவேயிறே பாற்கடல் யோகநித்திரை சிந்தை செய் திருக்கிறபடி. அச்யுத! என்பது அந்தர்யாமித்வத்தை நோக்கியதாகும்; ஓரிடத்தையும் நழுவ விடாமல் எங்கும் பரந்துளன் என்கிறபொருள் இங்கு விவக்ஷிதம்.

இவ்வைந்து விளிகளும் தேவப்பெருமானையே நோக்கியவை என்கிற நிர்வாஹத்திற்கு இந்த நிர்வாஹம் ப்ரதிகூலமன்று. ... .... .... .... (1)

**समस्तप्राणिसन्त्राणप्रवीण करुणोल्बण । विलसन्तु कटाक्षास्ते मय्यस्मिन् जगतां पते! ॥ २ ॥**

ஸமஸ்தப்ராணி ஸந்த்ராணப்ரவீண! கருணோல்பண!
விலஸந்து கடாக்ஷாஸ்தே மய்யஸ்மிந் ஜகதாம பதே. (2)

ஸகல சேதநர்களையும் காத்தருளவல்லவனே! அருள்மிகுந்தவனே! உலகங்கட்கெல்லாம் இறைவனே! இந்த அடியேனிடத்தில் உன்னுடைய கடாக்ஷங்கள் ப்ரகாசிக்கவேணும்.

முதல் ச்லோகத்தில் ஸ்ரீமந்! அம்புஜலோசந! என்ற இரண்டு விளிகளையும் விவரிப்பது போன்றுளது இந்த ச்லோகம். ஸ்ரீமானாகையாலே ஸமஸ்தப்ராணிகளையும் ரக்ஷித்தருளக் கடமைப்பட்டவன் என்று விவக்ஷித்துப் பூர்வார்த்தம் அருளிச்செய்தார். அம்புஜலோசநனாகையாலே * தாமரைப்பூப்போலே செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழித்தருளவேணுமென்று விவக்ஷித்து உத்தரார்த்தமருளிச்செய்தார்.

ப்ரவீண! என்று தனிப்பதமாகப் பிரிக்காதே பூர்வார்த்தம் முழுவதையும் ஒரே பதமாக்கி, 'ப்ரவீணமான கருணையால் மிக்கவனே' என்று உரைத்தனுமாம். .... .... (2)

